# ஸ்ரீ பூஜ்யஸ்ரீ மஹாஸ்வாமிகள் அருள் நோக்கி...

(ஒரு ஒளி, ஒலி சார் படத்திரட்டு)



ஹர ஹர சங்கர ! ஜெய ஜெய சங்கர !
காமகோடி சங்கர ! காமாக்ஷி சங்கர !

தொகுப்பாசிரியர் M.S. கோபாலகிருஷ்ணன்

**SRI PRAPATHI PUBLISHERS**
**ஸ்ரீ பிரபத்தி பப்ளிஷர்ஸ்**
F4, Sakthi Abhirami Apartments, 73, South Mada Street,
Thiruvanmiyur, Chennai - 600 041. (M) 9840311364

உ

ஸ்ரீ குருப்யோ நம:

நாம் வாழும் காலத்தில், ஆத்ம ஞானியாக திகழ்ந்து, நூறாண்டு வாழ்ந்து, ஆத்ம ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபித்து, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் 68-ம் குருவாக விளங்கியவர் கருணாமூர்த்தி, பூஜ்யஸ்ரீ மஹாஸ்வாமிகள்.

இறை எய்தபின், மறைத்து வைத்திருந்த அவர் ஆன்ம சக்தியின் விலாசம், பல பக்த கோடிகளின் அனுபவமாக, நமக்கு புத்தகங்கள், மாத, வார இதழ்கள், இணையதளம், தொலைக்காட்சி இவைகள் வாயிலாக தெரிந்து கொண்டு, நாம் பரவசத்தில் ஆழ்ந்து திளைக்கிறோம். அந்த பரவசத்தின் வெளிப்பாடே, 64 படங்கள் கொண்ட, இந்த சார் படத்திரட்டு.

கருணை, அன்பு, வாத்ஸல்யம், பேரின்பம், சாந்தம் என்னும் பல ரஸங்களையும், அருள், ஹாஸ்யம், அற்புதம், காந்தி, மோனம் என்ற முகபாவனைகளையும், வெளிப்படுத்துவதாக திகழ்கின்றது இந்த படக் கோர்வை. அபய அருள் ஹஸ்தங்கள், சின் முத்ரைகள், யோக ஆஸனங்கள், ஆனந்த தாண்டவம் இவையனைத்தும் நிறைந்து காணப்படும் இந்தப் படங்களை நோக்க, நோக்க நாம் மன நிறைவும், தெளிவும் அடைகிறோம். பக்தர்களின் மனோபாவத்தை பொறுத்து, சிரத்தை, வைராக்யம், பக்தி, ஞானம் இவைகளை போதிப்பதாகவும் அமைந்துள்ளது.

ஒளிக்கோர்வையை, ஒலிக்கோர்வையாக திகழும்படி, ஸத்குருவின் மஹிமையை வெளிப்படுத்தும் பல பாடல்களிலிருந்து திரட்டி, ஒவ்வோர் படத்திற்கும் கீழ், மஹாஸ்வாமிகளின் முகபாவனையை பிரதிபலிக்கும் வண்ணம் பாடல்களை இணைத்துள்ளோம்,

இத்தொகுப்பை ஒரு ஞான ஸாதனமாக பயன்படுத்தி, அன்பர்கள் பூஜ்யஸ்ரீ மஹாஸ்வாமிகளின் அனுக்ரஹத்தை பெற வேண்டுகிறோம்.

**ஸ்ரீ பிரபத்தி பப்ளிஷர்ஸ்**



ஸ்ரீ ஸத்குரு சரணார விந்தாப்யாம் நம:

ஐந்து உறைகளால் மூடப்பட்ட ஜீவன், இவ்வைந்தையும் கடந்து பிரும்மானந்தத்தை அனுபவிக்க இயலும் என்று தைத்ரீய உபநிஷத் பறைசாற்றுகிறது. அவ்வனுபவத்தை அடைந்து, பரிபூரண நிற்குணமான சிகரமாக திகழ்கிறது ஸ்ரீ காஞ்சி காமகோடி மடவிளாகத்தில் அமைந்திருக்கும் ஸ்ரீ மஹாஸ்வாமிகள் பிருந்தாவனம்.

ஸகுணமாகவும், ஸாரூப்யமாகவும், நாம, ரூபங்கள் மூலமாக அனு சந்தானம் செய்து, ஐக்யத்தை அடைவதே மனித வாழ்க்கையின் உயர் நோக்கம். சாதனா மார்கத்தில் ஸத்கர்மா, விவேகம், வைராக்யம், பக்தி, யோகம், ஞானம் என்ற பல வழிகள் வகுத்து இணைத்துத் தரப்பட்டுள்ளன. அந்த நிலையையும், வழிகளையும், படத்திலும், சொல்லிலும் விளக்கும் வகையில் இத்தொகுப்பு ஐந்து பாகங்களாக பிரித்து வழங்கப்படுகிறது.

பாகம்
1. ஆன்மீக பீடத்தில் அமர்ந்து அருள் ஆசி புரிதல்
2. பக்தர்களுக்கு வழிகாட்டும் வகையில் ஆராதனை செய்தல்
3. யோக மார்கத்தில் சமாதி நிலைக்குமுன் அமையும் தீவ்ர தியான யோக நிலையில் இருத்தல்
4. யோக மார்கத்தின் உச்சிக்கிளையில் பறிக்கப்பட்ட ஞானப் பழங்களை உதிர்த்து உபதேசம் செய்தல்
5. பாமர மக்கள் துயர் தீர்க்க, அபய, அருள், ஹஸ்தங்கள், சின்முத்ரை மூலம் யோக க்ஷேமங்கள் அளித்தல்.

மொத்தம் 64 படங்கள் அடங்கிய இந்த மஹாஸ்வாமிகளின் மலர் மாலையை ஸ்ரீ சரணர்கள் அவர்களின் பாத கமலங்களில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அனுக்ரஹத்துடன், ஸமர்ப்பிக்கிறேன்.

விஜய வருஷம்
மாசி மாதம்
அனுஷம் நக்ஷத்திரம்
22.2.2014

M.S. கோபால கிருஷ்ணன்
தொகுப்பாசிரியர்
ஏ/3, காயத்ரி, கெனால் ரோடு,
திருவான்மியூர், சென்னை – 41.

# சந்திர சேகரேந்திர ஸ்துதி

ராகம்: ஹிந்தோளம்

பல்லவி

சந்திரசேகர சரஸ்வதியே சரணம்
காஞ்சி வாழ் தயாநிதியே

அனுபல்லவி

அந்தரங்கமுடன் உந்தன் அருளை பெறவே நான்
என்ன தவம் செய்தனோ கருணை கடலே

சரணம்

பக்தர்கள் செய்திட்ட பாக்கியமாம் பாரினில்
பரம் பொருளாகவே அவதரித்தாய்
மாதவம் செய்திடும் மாணிக்கம்மாம் ஸ்ரீ
ஜயேந்திர சரஸ்வதியை நீ அளித்தாய்
பந்த பாசம் வென்ற பாலயோகி ஸ்ரீ
சங்கராநந்தேஸ்வர சரஸ்வதியை அளித்தாய்
சந்திரசேகரேந்திர சரஸ்வதியே சரணம்
காஞ்சி வாழ் தயாநிதியே



பல்லவி

ராகம்: சாருமதி – ஆதி தாளம்

நடமாடும் தெய்வமே (காஞ்சியில்) நடமாடும் தெய்வமே
காமகோடி பீட கருணாமூர்த்தியே நடமாடும் தெய்வமே

அனுபல்லவி

இடர் தீர்த்து என்மன இருள் நீக்கி
சுடரொளி காட்டிடும் ஞான குருவே

சரணம்

பக்தியினாலே பரமனை அடைய
பாமரனுக்கும் அருள் வழிகாட்டி
முக்தியளித்திடும் முழுமதி முகமே
மகராஜன் பாடிடும். மவுன குருவே

இயற்றியவர்: மஹராஜபுரம் சந்தானம்



ஈஸ்வரன், குரு, ஆத்மா என்ற நாமங்களால்
அழைக்கப்பட்டவரும், மும்மூர்த்திகளாய் திகழுபவரும்,
பரந்த ஆகாசம் போல நீக்கமற நிறைந்திருப்பவரும் ஆகி
தரணிதனில் அவதரித்த தக்ஷிணாமூர்த்தியே சரணம்!



உருவாய் அருவாய், உளதாய் இலதாய்,
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்,
கருவாய் உயிராய்க், கதியாய், விதியாய்க்,
குருவாய் வருவாய், அருள்வாய் குகனே !

## பாகம் 1 – ஆன்மீக பீடத்தில் அமர்ந்து அருள் ஆசி புரிதல்



பக்தர்கள் செய்திய பாக்கியமாம்
பாரில் பரம் பொருளாக அவதரித்தாய் – சரணம் !



ஆத்ம ஞானம் அளிக்கும்
ஞான குருவே – சரணம் !



மறைசாத்திர புராண வித்பன்னரே – சரணம் !



சுத்த பரிபூரணமாய் நிர்மலமாய்,
அகண்டிதமாய், சொருபானந்தச்
சக்திகள் நீங்காத வணம் தன்மயமாய்,
அருள் பழுத்துத் தழைத்த ஒன்றே!



கருணை பார்வையால் காத்தருளும்
கருணை தெய்வமே – சரணம் !



கலியுகம் தன்னில் கண்
கண்ட தெய்வமே – சரணம் !



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியே – சரணம் !



மாய மயக்கு ஒழிந்தார் மற்று ஒன்றை நாடுவரோ
நேய அருள் நிலையில் நிற்பார் பராபரமே !



அகிலம் போற்றிடும்
ஆத்ம ஞானியே – சரணம் !

வேத மார்க்க ப்ரமாணமாக
வாழ்ந்தவரே – சரணம் !





அஞ்ஞான இருள் அகற்றும்
மெய்ஞானமே – சரணம் !



அருள் ஞான ஜோதி
வடிவான பரனே – போற்றி !



ஆத்ம ஸ்வரூபமான
பரமகுருவே – சரணம் !



ஸர்வமும் தானாக ஸமரஸபதம்
தந்த ஸர்வேச்வரனே – குருநாதா !

பாகம் 2 - பக்தர்களுக்கு வழிகாட்டும் வகையில் ஆராதனை செய்தல்



தவமா முனிவா, இறைவா அருள்வா,
அவதாரமாய் வந்தனன் ஆதி சிவா,
புவி மேவிடும் பாவங்கள் போக்கிடுவாய்,
ஸ்ரீ சந்திர சேகரரே சரணம்.



ஆரா அமுதே, அரசே, ஆனந்த வெள்ளப்
பேராறே, மோனப் பெருக்கே பராபரமே – சரணம் !



சுத்த சத் ஸ்வரூபமாய்
வந்த குருவே – சரணம் !



ஸாக்ஷாத் பரசிவாமோக தர்சநாய நமோ நம !
(நிலைத்து நிற்கும் பரசிவ தர்சனத்தை கண்ணெதிரேயே
கொடுப்பவருக்கு நமஸ்காரம்)

## பாகம் 3 - யோக மார்கத்தில் சமாதி நிலைக்குமுன் அமையும் தீவ்ர தியான யோக நிலையில் இருத்தல்



மறை பொருளை உரைத்திடும்
மாமுனியே – போற்றி !



உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் – போற்றி !
உகப்பார் மனத்தென்றும் நீங்காய் – போற்றி !



ஓம் வீணாம்ருதங்க ஸகல
வாத்ய நாத ஸ்வரூபாய நம:!



பேரறிவாகிய பிரம்ம நிலைக்கடல்
பேசறியேன் – குருநாதா !
ஆர் அறிவார் எனக்கருளின
அனுபவம் ஆண்டவனே – குருநாதா !



காசம் படர்ந்த கண்ணுக்கு ஒளி காட்டி
வைத்த காரணனே – குருநாதா !
நாசப் பிறவி நீக்கி நாடெனக்
கருளின நாயகனே – குருநாதா !



பாசமகற்றி பதி தன்னில் சேர்த்து
வைத்த பண்டிதனே – சரணம் !
தேசமெங்கும் புகழ்
ஸ்ரீ சந்திர சேகரேந்திர குருவே – சரணம் !

துர்விஷயங்களை துரத்தி தூளாக்கிய
என் துரை நீர் தானே – குருநாதா!
நிரதிசயாநந்தம் எனக்கீந்த
நிர்மலனே – குருநாதா !







அந்தகன் போலவே அலைந்து திரிந்த
என்னை ஆண்டவனே – குருநாதா!
சிந்தை மகிழ்ந்திட சிவபதம்
அருளிய தேசிகனே – குருநாதா !

அந்தரங்க மறியாது
அலைந்து திரிந்தேன் – குருநாதா!
ஸந்ததம் குருபக்தி
அருளிய அன்புருவே – குருநாதா !



தன்மயமாய் ஆன குருவே – போற்றி !



எம்மை உய்விக்க வந்த
லோக குருவே – போற்றி !



தடையில்லா தபஸால் திவ்ய தேஜஸுடன்
விளங்கும் குருவே – போற்றி !



கர்ம ஸாகரம் தாண்ட ஓடமாகி வந்த
பரம குருவே – சரணம் !



பர்வதமாம் பிரதிபந்தம் அறுத்ததுன்
பாதமல்லவோ – குருநாதா !



ஒளி வீசும் தங்க காந்தியுடைய
குருவே சரணம் !



பார்வை ஒன்றினாலே
பாவனமாக்கும் பரமகுருவே – சரணம் !



சித்தாய் நிறைந்திருக்கும்
சின் மயனே – சரணம் !





தீன தயாளோ தவ சரணம் !

விழித்தாமரைகள் பழியை அழிக்கும்
மொழித்தேன் சுவையோ மகிழ்வை அளிக்கும்
எழில் காஞ்சியை காத்திடும் ஜகத்குருவே
ஸ்ரீ சந்திர சேகரரே சரணம் !



பவரோகம் தீர கைகண்ட
ஔஷதமே – சரணம் !



சுத்தியில் ரஜதம் போல் பிரபஞ்சம்
மித்தையென சொன்னீரே – குருநாதா !
சுருதி யுக்தி அனுபவம் சொல்லி
உலகப் பேயை ஒழித்தீரைய்யா – குருநாதா !



சீர் பெருகிடும் ஸச்சிதானந்த
தேசிக சின்மயனே – குருநாதா !
பார் முழுதும் பரமாகி நிறைந்திடும்
பாக்கியமே – குருநாதா !



ஸத்து வழவான சங்கரனே – சரணம் !



என்ன தவம் செய்தமோ
உன்னை போற்றிட – சரணம் !



எண்ணாகி யெண்ணுக்கோர் எழுத்தும் ஆகி
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்றவாறே
சொல்லாகிச் சொல்லுக் கோர் பொருளுமாகிச்
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்றவாறே



முக்தி பரம சுகம் தனக்குள் தானே
என்றும் இருந்தாலும் – குருநாதா
பரம ரஹஸ்யம் பழ மறை நூல்களின்
பரம் பொருளே – குருநாதா

## பாகம் 4 - யோக மார்கத்தின் உச்சிக்கிளையில் பறிக்கப்பட்ட ஞானப் பழங்களை உதிர்த்து உபதேசம் செய்தல்



ஆசைக்கு ஓர் அளவு இல்லை, பாசக் கடற்குளே
விழாமல் மனதுஅற்ற, பரிசுத்தநிலையை அருள்வாய்:
பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கம்அற நிறைகின்ற
பரிபூரண ஆனந்தமே!





வேதத்தை காத்திட்ட வேந்தன் இவன் எங்கள்
வேதனை தீர்த்திட்ட நாதன் இவன் !
உருவே, அருவே, குருவே, திருவே,
ஸ்ரீ சந்திர சேகரரே சரணம் !

ஸரஸ பேச்சினிலே ஸச்சிதாநந்த
நிலை தந்த சாச்வதனே – குருநாதா !
பக்தி வைராக்கிய பதமெனக்குருளிய
பாக்கியமே – குருநாதா !





அருள் நாயகனே, இறைத்தூதுவனே,
கடும் காலனை வீழ்த்திய காவலனே !
சரணம் புகுந்தேன் அபயம் தருவாய்,
ஸ்ரீ சந்திர சேகரரே சரணம் !

தருமநெறிதனை உரைத்த
தயாபரனே – சரணம் !



திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்,
திடஞானி தெரிசனமே தேவ பூஜை,
திடஞானி தெரிசனமே செப தபங்கள்,
திடஞானி தெரிசனமே செயுமறங்கள்,
திடஞானி தெரிசனமே சிவத்தை காணல்,
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை,
திடஞானி தெரிசனமே மேவுதற்குத்
திரிவிதமா மூலகத்து மரிதாமியார்க்கும்

Acknowledgement

1. ஸ்ரீ எஸ்.வி. ராதாகிருஷ்ண சரஸ்வதி அவர்களால் இயற்றப்பட்ட ஸ்ரீ குரு நாமாவளி
2. ஸ்ரீ ஆவுடை அக்காள் பாடல் திரட்டு (திருக்கோவிலூர் ஞானாநந்த ஆஸ்ரமம் வெளியீடு)
3. தாயுமானவர் பாடல்கள்
4. பெரியவா தோடகாஷ்டகம்
5. ஸ்ரீ ரமணாஸ்ரமம் வெளியீடான ரிபு கீதை
6. மஹாராஜாபுரம் சந்தானம் இயற்றிய துதி
(பூஜ்யஸ்ரீ மஹாபெரியவாள் நூற்றாண்டு கமிட்டி, திருவல்லிக்கேணி, 1993 வெளியீடு)